21st August 1961]

(இ) அப்படியானல், எப்போது, என்ன செலவில் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) No, Sir.

(இ) Does not arise.

SRI A. VEDARATHNAM : கனம் அமைச்சர் அவர்கள் அங்கே வந்திருந்தபொழுது இந்தப் பகுதி ரஸ்தாவைப் பார்த்தார்கள். அந்தப் பக்கத்திலுள்ள கிராமவாசிகள் எல்லோரும் தங்கள் தங்கள் குறைகளைத் தெரிவித்துக் கொண்டார்கள். அந்தச் சமயத்தில் இதைக் கவனித்து உடனே வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்வதாக சொன்னதோடுமட்டு மல்லாமல், அங்கே உள்ள அதிகாரிகளிடமும் குறிப்பு எடுத்துக்கொள்ளச் சொன்னர்கள். இப்பொழுது நெகடிவ் பதில் கொடுக்கின்ற காரணம் தெரியவில்லை. தயவு செய்து இதை கவனித்து ஆவன செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நான் வாக்களித்ததற்கு இணங்க ஏற்பாடு நடந்து வருகிறது. இப்பொழுது இதை எடுத்துக் கொள்வதா அல்லது பிறகு எடுத்துக்கொள்வதா என்பதுதான் பிரச்சனை. மூன்று லட்சம் ரூபாய்க்கு திட்டமிட்டு இதை பரிசிலனைச் செய்து வருகிறோம். மூன்ருவது திட்டத்தில் இது சேர்க்கப்படவில்லை. பின்னர் பரிசிலனை செய்து சேர்த்துக் கொள்ளலாம்.

*Steel (Export)*

* 1300 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தேனிரும்பு வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது என்று மத்திய சர்க்காருக்கு மாநில சர்க்கார் ஆட்சேபணை செய்துள்ளார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

DEPUTY SPEAKER : Next question.

Sri S. M. Annamalai rose.

DEPUTY SPEAKER : When the answer is in the negative, I do not know what the hon. Member is going to ask?

Sri S. M. Annamalai again rose.

DEPUTY SPEAKER : When the answer is 'No', I am not going to allow any supplementary question. I have already called the next question. The hon. Member will please resume his seat.

*By-pass roads (Pennagaram)*

* 1301 *Q.*—SRIMATHI HEMALATHA DEVI : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சேலம் ஜில்லா தர்மபுரி தாலுக்காவில் உள்ள பென்னகரத்தில் தர்மபுரி ஒகேனக்கல் ரோட்டிற்கு பை-பாஸ் ரோடு போட உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : Yes.

SRIMATHI HEMALATHA DEVI : இந்த ரோடானது அடிக்கடி விபத்துக்கள் ஏற்படும்படியான நிலையிலே மிகவும் குறுகலாக இருப்பதினலே, கூடிய சீக்கிரம் இந்த வேலையைச் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இது முக்கியமாக எடுத்துக் கொள்ள வேண்டிய ரோடாக இருப்பதினலே, மூவாயிரத்து நாநூறு அடி நீளத்திற்கு ஒரு பை-பாஸ் ரோடு போடுவதற்கு திட்டமிட்டிருக்கிறோம். அதுவும் வெகு சீக்கிரத்தில் போடப்படும்.